(17)

போதிக்க அவள் மனோபீஷ்டம் நிறைவேறி கிருஷ்ணகுமார் என்ற புத்திரன் ஜனிக்கிறன். புஷ்பகாத்தீவிற்கு சென்ற அனந்தனிடம் புஷ்பாவதி என்னும் வனிதைக்கு காதல் ஏற்படுகிறது. புஷ்பாவதியின் சக்தியால் தன் மனைவி சந்திராவதியின் வரலாற்றை அறிந்து அவளை தண்டிக்க கோகுலம் திரும்புகிறன். பரஸ்திரீயை அபகரித்த கிருஷ்ணன்மீது குற்றம் சாட்டப்பட்டு சப்தரிஷிகளும் இதில் தீர்மானம் சொல்ல சக்தியில்லாமல் அக்னி பகவானிடம் முறையிடுகிறார்கள். அக்னி பகவான் கிருஷ்ணனும் சந்திராவதியும் குற்றவாளிகள்தான் என்று சொல்லவே, சப்தரிஷிகள் கிருஷ்ணன்மீது குற்றம் சாற்றுகினறார்கள். அது சமயம் பரமேஸ்வரன் தோன்றி கிருஷ்ணனும் சந்திராவதியும் குற்றவாளிகள் அல்ல என்பதை விளக்கி சந்திராவதிக்கு சாபவிமோசனம் தந்து சங்கர நாராயணனாக காக்ஷியளிக்கின்றார்.

சுபம்! சுபம்!! சுபம்!!!



# கிருஷ்ணகுமார் பாடல்கள்.

நாரதர்

இராகம்: நாட்டக்குறிஞ்சி] [தாளம்: ஆதி

பல்லவி

நாளும்—சிவ—சிவ—சிவாவென்று பூஜை
நாடில்—வினைகள்—தீரும்—ஆம் (ஸ)

அநுபல்லவி

நாதனை—நீதனை—கடன சங்கீதனை
போதனாதீதனை—ஜோதி விநோதனை (ஸ)

இராகம் கருட்டி]

சரணங்கள்

சிவ-சிவ-சிவமென்றொருதரம் சொன்னால்
பவமில்லை-காருண்ய-மூர்த்தி நீயன்றோ
அவலமானவரும்-அருளிலாதவரும்
அடி பணிந்தால் முக்தி—முடிதருவாயென்று (ஸ)

இராகம்: அசாவேரி
மாதவ-கோவிந்த-போதமுகுந்தா
ஆதவனே-வைகுந்தா-ஆரணனே (ஸ)

இராகம்; ஹம்சாநந்தி]
வான் தொடு மாமலை-கான் படுஞ்சாரல்
தேன் படுஞ் சோலைகள்-மீன் படுஞ் சிகரம்
மான் கரமேவிய-மாதவன் வாழும்
மலைபரசரிய-கைலையை யணைவோம் (ஸ)

சன்யாஸி

இராகம்: துந்தலவராளி] [தாளம்: ஆதி

பல்லவி

கண்ணன் பிறந்தான் - காசினிமீதே
கவலைகள் நீங்கிடுமே - கமல (க)

ஏ:— முத்தமொண்ண முத்த வேணும்
முத்தக்காரி பொம்பளே

மங்:— மத்தவா பர்த்தாலே மோசம்
மம்மதன்போலாம்பளே

ஏ:— ஒத்தரு மில்லாத யிடத்
தொரத்தொரு மூலேக்கே

மங்:— செத்தநாளி சென்றிருப்போம்
சீக்கிரம் வா சோலைக்கே

கிருஷ்ணு—சந்திராவதி

[இராகம் : திலாங்] [தாளம் : ஆதி

பல்லவி

கிரு:— வசந்தகால - மிதுவே - மனோகர
மிசைந்த - நேர மிதுவே

அனுபல்லவி

மயிலாடும் - சோலைக் - குயில் பாடும்
வானொளி - மாகடல் - நாடும் - கூடும்
மணமிகு - மாமலர்க் - தேன் பொழி மாருதம்
வாசமும் - நேசமுல்லாசமும் சேரும்

சரணம்

சங்:— மன்மத பூஜையின் கேளி விலாஸம்
மல்லியும் முல்லையும் நேசம்
மரகத வல்லிகள் வண்டாடும் பாடும்
வாசமும் நேசமுல்லாஸமும் கூடும்
மாமதி - வானிடை - மேவுது - ஒய்யாரம்
மாமதன் - வாளியின் சாரம்
மாமலர்ச் - சோலை - எங்கும் சிங்காரம்
மாதெனைக் - கூடுது - காதலின்னேரம்

கிருஷ்ணு—சந்திராவதி

[இராகம் : மிஸ்ரகாபி] [தாளம் : ஆதி

சங்:— மதனுகம மோஹன ரூபா - நடர்
மாயன கோகுல பத ராஜா
மலர் போல் விரலால் எந்தன் - மலர்க்கண்கள்
மூடினதா ரென்ப தறிவேனே
மதனுகம மோஹன மாமே

கிரு:— மதிமுக வநிதா மணியென நீதான்
மனதிடைக்கண்ட தெவ்வாறே கூறாய்
மதனுகம மோஹன ராணி

சங்:— தேனிதழ்ப் பூவிரல் மருவிடும் பொழுதே
சிந்தைய மொன்றான தாமே வாமா
மதனுகம நானறியேனே

கிரு:— வானுறு மாமதி போல் முகமாதே
வானிடை யென்ன கண்டாய்

சங்:— வானக ஸ்யாமள நீல சிங்காரா
வானிடை நின் முகம் கண்டேன்

கிரு:— வாரியின் மீதாடும் அலையினில் நுரையினில்
மாதரசே என்ன கண்டாய் நீ

சங்:— வாரியின் மீதாடும் அலையினில் நுரையினில்
வானவனே - நினையே கண்டேன்

(வ) கிரு:— சோலையிற் தேன் மலர் தனிலென்ன கண்டாய்

(வ) சங்:— சோலையிற் தேன் மலர் தனிலுனைக் கண்டேன்

கிரு:— கனவிலும்

சங்:— கனவிலும்

கிரு:— உனையே

சங்:— கண்டேன்

(வ) கிரு-சங்:— காதலதே யுலகம் - இன்பம்
காதலதே யுலகம்
காதலல்லா தொன்றுமேயில்லை
காதலதே யுலகம்

கிருஷ்ணு—சந்திராவதி

(வ) [இராகம் : கமாஸ்] [தாளம் : திஸ்ரநடை

சங்:— கண்ணின் மணி போல்வாய் - கண்ணு
காதல் விளக்காவாய்
பண்ணிசைந்த செவ்வாய்த் - தேனைப்
பாவை யெனக் கருளாய்

இராகமாலிகை] சிவன்

ஆன்றவரில்லை சொல்லோ?
அறநெறி தவறிப்போச்சே!
சான்றான வேதநூலின்
தகைதடு மாறிற்றே? பின்
ஏன்றுள சாட்சி யெல்லாம்
இடறிற்றே! இஃதறிவன்! மெய்ம்மை
பூண்டுளார் தம்மை யிகழ்ந்தப்
பொய்யுறும் குற்றச்சாட்டு!

சிவன்

இராகம்: மிஸ்ரகாளிக்கடா] [தாளம்: ஆதி

பல்லவி

சோம சேகரனே அறியாய்
சூது கூறினை அரனுக்
கன்பமே விளைவே

அனுபல்லவி

காணும் மாயனு மோருருவாம்
நாடு மீசனின் கருவாம்
மாணும் மா மழுவு மோர் கரம்
கூவல் சக்ரதர மோர் கரம்

சரணம்

பசுமை பாதியாம் தீ நிறம் பாதி
பாரும் வானமுமே—ஒன்றாக
சேரும் பெருந்தவம்
யோக நாதன் போக நாதன்
ஞானம் கூடும் ஏகநாதனை
தேவனொருவன் மேவும் ரூபம்
வேறு வேறும் காணுவாய்
மாறி வாகாம் பேறுவாய்
தானே சிவன் மாலாம்
மாலே சிவன் தானும்—பாராய் (சோம)

சேலம் தொழிலாளர் பிரஸ், சேலம்.

ஸீனரியோ & டைரக்ஷன்

**எஸ். டி. எஸ். யோகி**

சங்கீத டைரக்ஷன்

**கே. சாம்பமூர்த்தி (கே. பவானி)**

**&**

**சர்மா பிரதர்ஸ்**

ஒளிப்பதிவு

**ஆர். எம். கிருஷ்ணஸ்வாமி**

ஒலிப்பதிவு

**என். ராமநாதன், L. E. E.**

**&**

**கே. வி. ப்ரஸாத்**

ஸ்டுடியோ

**ப்ரகின் ஸ்டுடியோ**

**&**

**சுந்தரம் ஸௌண்ட் ஸ்டுடியோ**

ஆர்கெஸ்ட்ரா

**எச். எம். வி. பார்ட்டி**

**&**

**சர்மா பிரதர்ஸ்.**

**கிருஷ்ணகுமார் பாடல்களை**

எச். எம். வி. ரிகார்டுகளில் கேட்கவும்...